4

# சோப்புக்கட்டிகள்

''இது மகா பேஜார் புடிச்ச வேலை'' என்று சலிப்புடன் சொன்னாள் சூப்பரின்டெண்ட் சொர்ணம்.

''எதுக்குச் சொல்ல வரேன்னா அவங்ககிட்ட ரொம்பக் கறாராப் பேசணும். கண்டிச்சுச் சொல்லணும். அவங்க வாழ்க்கை முறையிலே ரொம்பப் பெரிய புரட்சி நம்மாலே செய்ய முடியாட்டாலும் கொஞ்சத்துக்குக் கொஞ்சம் மாறுதல் கொண்டு வரலாம்.''

''சரிங்க.''

''ஆகாரமெல்லாம் கையோடு கொண்டு வந்திருக்கேயில்லே?''

''ஆமாங்க.''

''எந்த ஏரியாவுக்கு நீ போகணும்னு குறிச்சு வெச்சுக் கிட்டிருக்கியா? அப்ப கிளம்பு. வெயில் ஏறிடும் விருவிருன்னு, ஒரு மாத இறுதிக்குள்ளே உன் ப்ராஜக்ட் வேலையுடைய முழு ரிப்போர்ட் கிடைக்கணும். உன் முயற்சிக்குப் பலன் இருந்தால்தான் உன் ரிப்போர்ட்டுக்கு மதிப்பு.''

நளினி உற்சாகத்துடன் புன்னகைத்தாள். இந்த சாதாரண வேலையைப்பற்றி இந்த சூப்பரின்டெண்ட் எதற்கு இப்படி அலட்டிக் கொள்கிறாள் என்று அவளுக்கு வேடிக்கையாக இருந்தது.

அவள் குடையை விரித்துத் தெருவில் இறங்கும்போது வெய்யிலின் ஆரம்ப உக்ரம் வெளிப்பட்டது.

நளினிக்கு எதுவும் உரைக்கவில்லை. மனசில் உற்சாகம் கொப்பளித்தது. எத்தனை நாட்களாகக் காத்திருந்து இந்த வேலை கிடைத்திருக்கிறது!

தொட்டிப்பட்டிக்குப் போய்ச் சேரும் போது வெய்யில் தகித்தது. தெருவின் அமைப்பையும் வீடுகளின் நிலையையும் ஒரு நோட்டம் விட்டு அவள் தன் புத்தகத்தில் குறிப்பெடுத்துக் கொண்டாள்.

தெரு மகா அசிங்கமாக இருந்தது. முனிசிபாலிட்டியின் குப்பைத்தொட்டி நிரம்பி வழிந்து அதில் இடம் போதாமல் தெருவே குப்பைக்கூளமாக இருந்தது. கூரையும் சுவர்களும் அங்கங்கே இடிந்து அதைப்பற்றி யாருக்கும் கவலைப்பட நேரமில்லாத மாதிரி பரிதாப மாகக் காட்சி அளித்தன. குடிசைகளுக்கு வெளியே குழந்தைகள் செய்திருந்த அசுத்தத்தில் நளினிக்குக் குமட்டிக்கொண்டு வந்தது.

சுகாதார அறிவைப் பரப்ப இதை விட பொருத்தமான இடம் இருக்க முடியாது என்று நினைத்தபடி ஒரு குடிசையின் வாசலில் நின்று குரல் கொடுத்தாள்.

ஒரு சிறுமி வெளியில் வந்தாள். முகத்தில் பால் வடிந்தது. கிழிசல் பாவாடை சட்டையை மீறி அந்தப் பார்வையிலும் முகத்திலும் ஏதோ ஒளிர்ந்தது.

'யாரு' என்றுகூடக் கேட்காமல் கேள்விக்குறியுடன் நின்ற அவளைப் பார்த்து நளினி மெல்லச் சிரித்து,

''நா சுகாதார இன்ஸ்பெக்டர் வந்திருக்கிறேன், வீட்டிலே யாரும் பெரியவங்க இல்லையா?'' என்றாள்.

அந்தப் பெண் விருக்கென்று உள்ளே சென்றது பதிலே பேசாமல். சில விநாடிகளில் பதினைந்து பதினாறு வயசுப் பெண் ஒருத்தி வெளியில் வந்தாள்.

''யாருங்க?'' என்றாள் குரலில் பீதி தொனிக்க.

நளினி சிநேகிதமாகப் புன்னகைத்தாள்.

''சுகாதார இலாகாவிலேருந்து வந்திருக்கேன். இந்தத் தெருவிலே சுகாதாரத்தைப் பத்தி விளக்கச் சொல்லி அனுப்பி யிருக்காங்க. வீட்டிலே வேற யாரும் பெரியவங்க இல்லையா?''

''இல்லீங்க. அம்மா மட்டும்தான் எங்களுக்கு. வெளியிலே போயிருக்காங்க.''

''எப்ப வருவாங்க?''

''இப்ப வந்துருவாங்க, நீங்க உள்ளார வந்து குந்துங்க.''

அவள் குனிந்து குடிசைக்குள் சென்றாள்.

உள்ளே அநேகமாய் இருட்டாக இருந்தது. கூரை அங்கங்கே பிய்ந்த இடத்திலிருந்து திட்டுத்திட்டாக வெளிச்சம் பாய்ந்திருந்தது. நட்ட நடுவில் நாலைந்து குழந்தைகள், பெரிய பெண்ணுக்கு அடுத்தடுத்து பிறந்த தம்பி தங்கைகள் போல் அதிக வயது வித்தியாசமில்லாத இளசுகள் உட்கார்ந்து பீடிச் சுருள் சுருட்டிக் கொண்டிருந்தார்கள். அவள் வந்ததற்காகக் கூடத் தலை நிமிர்த்தாமல் ஒரே சீரானவேகத்துடன் சுருட்டுவது அவளுக்கு வியப்பை அளித்தது.

அந்தப் பெரிய பெண் அவர்களுடன் உட்கார்ந்து வேலையில் தடங்கல் ஏற்பட்டுப்போன பரபரப்புடன் தொடர்ந்தாள்.

சுற்றுப்புறத்தையே கவனிக்காமல் ஏதோ ஓட்டப் பந்தயத்தில் ஓடும் தீவிரத்துடன் அல்லது எதைப்பற்றிய பிரக்ஞையும் இல்லாத ஜடத்தனத்துடன் எல்லாரும் உட்கார்ந்திருப்பது நளினிக்கு ஒரு சங்கடத்தை ஏற்படுத்திற்று.

சட்டென்று அவள் நிமிர்ந்து கூர்ந்து பார்த்தாள். அவர்களுள் ஒரு பையன், அக்காக்காரி அளவாகக் கத்தரித்துப் போட்டிருந்த

இலைத் துண்டுகளைத் தடவித் தடவி தடுமாற்றத்துடன் சுருட்டிக் கொண்டிருந்தான்.

அவள் தயங்கிக் கொண்ட கேட்டாள்.

''என்னம்மா, உன் தம்பிதானே இது? கண்லே ஏதாச்சம் கோளாறா?''

''ரெண்டும் பொட்டைங்க!''

தலை நிமிர்த்தாமல் கை நிற்காமல் சலனமற்ற குரலில் வார்த்தைகள் வந்தன.

''பிறவியிலேயா?''

''இல்லீங்க. இப்பத்தான் ஒரு வருஷமா!''

நளினி எழுந்து அந்தப் பையனருகில் சென்று கண்களைக் கவனித்தாள்.

''அடடா, என்னம்மா, ஆரம்பத்திலேயே கவனிச்சிருந்தா நல்லா ஆக்கிருக்கலாமே!''

யாருமே பதில் சொல்லாமல் உட்கார்ந்திருந்தார்கள் அவளும் அவளது கேள்வியும் அனாவசிய குறுக்கீடு என்றாற்போல்.

-''ஆஸ்பத்திரிக்கு இட்டுட்டுப் போகல்லியா?''

பெண் பார்வையை நிமிர்த்தாமல் சொன்னாள்.

''ஒரு தடவை அம்மா போனாங்க. ஆஸ்பத்திரியிலே அடிக்கடி வரச்சொல்றாங்க. எப்படிங்க போறது?''

''ஏன்? உடம்பு சரியில்லேன்னா கவனிச்சுக்கத்தானே வேணும்? இப்பப்பாரு. ஆயுசு முழுக்க இவன் குருடனாயில்லே இருப்பான்?''

அந்தப் பெண் மெல்லிய குரலில் சொன்னாள்.

''எங்களுக்கெல்லாம் வைத்தியம் செய்துக்க வசதி இல்லீங்க!''

''என்னம்மா சொல்றே நீ? பக்கத்திலேயே பெரிய கவர்மெண்ட் ஆஸ்பத்திரி இலவசமால்லே வைத்தியம் செய்யறாங்க?''

''எங்களுக்குக் கஷ்டங்க.''

''எப்படி? நீ விவரம் சொன்னா சென்டர்லே போய் விளக்கலாம்.''

'சொன்னால் நீ புரிந்து கொள்வாயா' என்கிற பார்வை பார்த்து அந்தப் பெண் மென்மையாகத் தன் வேலையைத் தொடர்ந்தாள்.

'எத்தனை அறியாமையில் இவர்கள் இருக்கிறார்கள்' என்று நளினிக்குப் பதட்டமேற்பட்டது.

அவள் தன் பதட்டத்தை அடக்கிக் கொண்டு அனுதாபம் தொனிக்க மெல்ல சொன்னாள்.

''இதான் உங்க ஜனங்ககிட்ட கஷ்டம். எது முக்கியம் எது முக்கியமில்லே என்கிறது தெரியறதில்லே. ஆஸ்பத்திரி பக்கத்திலே இருக்கு. தினமும் வரச் சொல்வாங்கத்தான். சரியார வரைக்கும். மந்திர தந்திரம் மாதிரியில்லே வைத்தியம் என்கிறது. கொஞ்சம் நிதான மாகத்தான் ஆகும்!''

திடீரென்று அந்தக் குருட்டுப் பையன் சிரித்தான்.

''எங்களுக்கு மந்திர தந்திரம்தான் வேணும்'' என்றான்.

''சூ மந்திரிக்காளீன்னா கண் வந்திடணும் - சோறு வந்திடணும் - தண்ணி கொட்டணும்!''

''ரெண்டாயிரம் பீடிங்க தானாகவே சுருண்டுக்கணும்!''

குழந்தைகள் எல்லாம் ஒன்றையொன்று பார்த்து அந்த வேடிக்கைக் கனவை ரசித்து வாய்விட்டுச் சிரித்தார்கள்.

அந்த சிரிப்பில் வினோதமாக சோகம் எட்டிப் பார்த்தது. கை நிற்காமல் பீடியை சுருட்டியது.

''அது என்ன கணக்கு, ரெண்டாயிரம் பீடிங்க?''

பெரிய பெண் தனது சலனமில்லாத குரலில் சொன்னாள்.

''நாங்க தெனமும் ரெண்டாயிரம் பீடி சுருட்டினாத்தான் எங்களுக்கு அன்னன்னிக்கு பன்னண்டு ரூவா கிடைக்கும்!''

அவள் அதிர்ச்சியும் திகைப்புமாகப் பார்த்தாள்.

''சுருட்டிருவீங்களா?'' என்றாள் அவள் பலஹீனமாகிப் போன குரலில்.

''எல்லாரும் உக்காந்தம்னா செஞ்சுரலாம். ஒரு ஆள் குறைஞ் சாலும் கஷ்டம். அம்மா வெளியிலே போயிருக்காங்க இன்னிக்கு, பாதி கூலிதான் கிடைக்கும்.''

''எலை கத்தரிச்சுப் போடல்லியா?'' என்று குருட்டுப் பையன் எரிச்சலுடன் தரையைத் துழாவினான்.

''இந்தா இருக்கு!'' என்று ஒரு இளசு எடுத்துக் கொடுத்தது.

''ஆஸ்பத்திரியிலே அடிக்கடி வரச் சொல்றாங்க. எப்படிங்க போறது?''

நளினிக்கு இரத்த நாளங்கள் உறைந்துபோயின. கண்கள் பனித்தன.

அவர்கள் யாருமே அவள் எதற்காக வந்திருக்கிறாள் என்பதில் ஆர்வம் காட்டாததும் இந்த நிர்ப்பந்தத்தினால். சென்டருக்குத் திரும்பியதும் அன்றைய வேலையைப் பற்றி சூப்பரின்டெண்ட் விசாரிப்பாளே என்று அவளுக்குக் கவலையேற்பட்டது. இந்தக் குழந்தைகள் குளித்துப் பழக்கமேயில்லை என்று தோன்றிற்று.

தலைமயிர் எண்ணெயும் சீப்பும் காணாமல் செம்பட்டை நிறத்தில் துருத்திக்கொண்டு நின்றது. கையும் காலும் உடம்பும் சுரண்டியெடுக்கலாம் போல் அழுக்குப் படர்ந்திருந்தது.

''நீங்கள்லாம் குளிக்கிற வழக்கமில்லையா?''

அந்தப் பெரிய பெண் திடுக்கிட்டுத் தலை நிமிர்ந்தாள் மோனம் கலைந்தாற் போல்.

பிறகு தன்னைச் சமாளித்துக் கொண்டு சொன்னாள்.

''தண்ணியிருந்தா குளிக்கிறதுதான்.''

நளினிக்கு லேசான அவமான உணர்வு ஏற்பட்டது பரிகாசம் செய்யப்பட்டமாதிரி.

''இங்கெல்லாம் குடிநீர் வசதி இல்லே?''

பெரிய பெண் உதட்டைப் பிதுக்கினாள்.

''பின்னே என்ன செய்யறீங்க?''

''இரண்டு தெருதள்ளி குடிநீர் குழாய் இருக்கு, க்யூவிலே நின்னு ஒரு குடம் எடுத்தாறணும்-அம்மா அதுக்குத்தான் போயிருக்காங்க.''

''அக்கா பசிக்குது!''

''சும்மா கெட! அம்மா வந்து தானே சோறாக்க முடியும்!''

''உங்கம்மா எப்பம்மா வருவாங்க?''

''வர நேரம்தான்ங்க. போயி ரொம்பநேரம் ஆகுது.''

''எளக்கும் நேரம் ஆறது. ஒரு நாளைக்கு ஒரு வீடுன்னு நினைச்சு இன்னைக்கு உங்க வீட்டை முடிக்கலாம்னு நினைச்சேன்.''

''எதுக்குங்க?''

''சுத்தமா இருக்கறது எப்படின்னு சொல்லிக் குடுக்கப் போறோம்-சுத்தமா இருந்தாத்தான் ஆரோக்கியமா இருக்க முடியும். தினமும் குளிச்சு துணிமணியை சுத்தமாத் துவைச்சு, சுற்றுப் புறத்தையும் சுத்தமா வெச்சம்னா... வியாதி வராது... சாப்பிடறதுக்கு முந்தி கை கழுவணும், வெளியே போயிட்டு வந்தா கால் கழுவணும்...''

திடீரென்று தன் பேச்சின் அசம்பாவிதம் புரிய அவள் நிறுத்தினாள்.

யாரும் பதிலே பேசவில்லை. இந்தப் பேச்சுக்கும் தங்களுக்கும் சம்பந்தம் இல்லாத மாதிரி.

அவள் பையிலிருந்து ஒரு சாமானை எடுத்தாள்.

''உங்களுக்கு இலவசமா கொடுக்கன்னு இதைக் கொண்டு வந்திருக்கேன்.''

அவர்கள் சட்டென்று திரும்பிப் பார்த்தார்கள்.

அவள் கையில் ரோஜா வர்ணக் காகிதத்தில் சுற்றப்பட்ட சோப்புக் கட்டி இருந்தது. அந்த அசுத்த சூழலில் அதன் நறுமணம் மெலிதாக எழுந்தது.

''நீங்க தெனமும் தேய்ச்சுக் குளிக்கிறதுக்கு!''

கடைசி இரண்டு குழந்தைகளைத் தவிர யாருக்கும் அதில் சுவாரஸ்யம் ஏற்பட்டதாகத் தெரியவில்லை.

''அக்கா. அம்மா தண்ணி கொண்டு வருவாங்க இல்லே. அதிலே நா இதைத் தேய்ச்சு குளிக்கவா?''

''ஆமா நீ குளிப்பே! அப்புறம் சோறாக்கவும் குடிக்கவும் எங்கே போவோம்?''

சின்னப் பெண் சட்டென்று அடங்கிப் போனாள்.

''மொகத்தைக் கழுவறேன்!'' என்றாள் வீம்புடன்.

''நானும் கழுவிக்கறேன்க்கா!''

''நானும்!''

''நானும்!''

''நீங்கள்லாம் பேசாம இருக்கப் போறீங்களா இல்லையா? வேலையைப் பாருங்க சோமாறிங்க!''

அவள் தன்னையே சாடுவதுபோல் நளினிக்குக் கூசிற்று.

ஒரு பெண் செய்து வைத்த சுருள்களை அவசரமாக எண்ணினாள்.

''எண்ணூறு கூட ஆவல்லே. இன்னிக்கு அரைகூலிகூடக் கிடைக்கப் போவுதோ என்னவோ!''

எல்லார் முகத்திலும் தெரிந்த அப்பட்டமான கவலையும் பீதியும் அடிவயிற்றைச் சங்கடப்படுத்திற்று.

'நீ வந்ததால் எங்கள் வேகம் தடைபட்டது' என்கிறார்களோ?

வாசலைப் பார்த்தபடி உட்கார்ந்திருந்த பையன் திடீரென்று உற்சாகமாகக் குரல் கொடுத்தான்.

''அம்மா வந்துட்டாங்க!''

எல்லார் முகமும், குருட்டு முகம் உட்பட மலர்ந்து போயின.

வெய்யிலில் கன்னிக் கருத்துப் போன சோர்ந்த முகத்துடன் நாற்பத்தி ஐந்து வயது சொல்லும்படியாக ஒரு பெண்மணி ஒரு பெரிய பித்தளைத் தவலையைத் தூக்கியபடி உள்ளே வந்தாள். அலட்சியமாக அதைக் கீழே வைத்த ஆக்ரோஷத்திலிருந்து குடம் காலி என்று தெரிந்தது.

குழந்தைகள் சில விநாடிகள் அதிர்ச்சியில் கப்சிப் பென்றிருந்தன.

''ஏம்மா, தண்ணி கிடக்கல்லே?''

பதிலே சொல்லாமல் அந்தப் பெண்மணி பெரிய குரலில் அழ ஆரம்பித்தாள்.

அழுதுகொண்டே புலம்பினாள்.

''ஒரே அடிதடிச் சண்டை குழாயடியிலே-மூணு மணி நேரம் க்யூவிலே வெய்யில்லே குந்தி சாவறேன்-குழாயடிக்கு என்முறை வரதுக்குள்ளாற தண்ணி நின்னுபோச்சு! சோறாக்கணும். அதுக்குத் தண்ணி கொடுங்கன்னு கெஞ்சறேன். பாவி முண்டைங்க தரமாட்டேன்றாளுங்க...''

சற்றுநேரமௌனத் திகைப்புக்குப் பின் எல்லோருமே மெல்லிய குரலில் அழ ஆரம்பித்ததும் அதைத் தாங்கிக் கொள்ள இயலாமல் நளினி எழுந்தாள். கண்களில் நீர் நிறைந்தது. அவர்களுடைய சோகத்தில் பங்கு கொண்டாற் போல. அவள் மௌனமாக வெளியில் வந்தாள்.

''யார்ரீ அது?''

''யாரோ சுகாதார இன்ஸ்பெக்டராம்!''

''சுகாதாரம்னா என்னம்மா?''

''அது இன்னாவோ ஒரு எளவு! அந்தப் பொம்பளைக் கையிலே இந்தக் கொடத்தைக் குடுத்தனுப்பு! அப்புறம் சுகாதாரத்தைப் பத்திப் பேசச் சொல்லு! சோமாறி முண்டைங்க! பேசத்தான் வருவாங்க.''

சாட்டையடியாய் வந்த வார்த்தைகளின் உத்வேகத்தில் மனசும் உடம்பும் கூசிப் போயின.

பையிலிருந்த சோப்புக் கட்டிகளை தெரு ஓரத்தில் ஏற்கெனவே நிரம்பி வழிந்த குப்பைத் தொட்டியில் போட்டுவிட்டு அவள் நடந்தாள்.

சாவி 1983

